# ஜீவன்முக்த ஆனந்தலஹரீ

(பேரானந்த நிலையான ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவர் உலகில் உடலில் இருப்பவராகக் காணப்படினும், இவற்றிலிருந்து விடுபட்ட முக்தி நிலையில் இருப்பவராதலிம், ஜீவன்முக்தர் எனப்படுவர். அவர்களது ஸ்திதி எப்பேர்ப்பட்ட பேரின்பப் பெருக்காய் உள்ளது என்பதை விளக்குவதால் இது "ஜீவன் முக்தானந்தலஹரீ" என்ப்படும்.)

**புரே பௌரான் பச்யன் நர யுவதி நாமாக்ருதி மயான்**
**ஸுவேஷான் ஸ்வர்ணாலங்கரண கலிதாம் ச்சித்ர ஸத்3ருசான் ।**
**ஸ்வயம் ஸாக்ஷாத்3 - த்3ரஷ்டேத்யபி ச கலயம்ஸ்தை: ஸஹ ரமன்**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷததமா: ॥** 1

(ஒரு) நகரத்தில் நல்ல உடை உடுத்தின வர்களாகவும்; தங்க ஆபரணங்களை தரித்தவர்களாகவும், உள்ள ஸ்திரீ புருஷர்களென்ற பெயரையும், உருவத்தையும் உடைய ஜனங்களைச் சித்திரத்தில் காணும் வடிவங்களைப்போலவே பார்த்துக் கொண்டும், தான் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷி மாத்திரமே என்றும், அதே ஸமயத்தில் உணர்ந்துகொண்டும், அவர்களோடு ரமித்துக் கொண்டு இருக்கிற ஞானியானவர் (ஜீவன் முக்தர்) குருநாதரிடமிருந்து அடையப்பெற்ற ஞான தீக்ஷையினால் (அக்ஞான) இருள் நீங்கி விட்டவர். எனவே இவர் நகரத்திலே மாந்தரிடையே கலந்தாற்போல் வாழ்ந்த போதிலும் மோஹத்தை அடையவே மாட்டார்.

**வநே வ்ருக்ஷான் பச்யன் த3ள - ப2ல - ப4ராந் - நம்ர ஸுசிகா2ன்**
**க4நச்சா2யாச்ச2ன்னான் ப3ஹுளகல - கூஜ3த் - த்3விஜ - க3ணான் ।**
**ப4ஜன் க4ஸ்ரே ராத்ரா - வவநி - தல - தல்பைக - சயநோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருத3க்ஷா - க்ஷததமா: ॥** 2

காட்டில் இலைகள், பழங்கள் இவைகளின் பாரத்தினால் தாழ்ந்திருக்கும் அழகான கிளைகளோடு கூடியதும், அடர்த்தியான நிழலால் மறைக்கப்பட்டதும், இனிக்கக் கூவுகிற ஏராள பக்ஷிக் கூட்டங்களோடு கூடியதுமான மரங்களைப் பார்த்துக்கொண்டும், பகல் வேளையில் அங்கு பார்த்தவைகளைக் கொண்டும், இரவு வேளையில் கட்டாந் தரையையே படுக்கையாகக் கொண்டு சயனிக்கிறவருமான முனி (ஜீவன் முக்தர்) தீக்ஷையினால் (அக்ஞான) இருள் நீங்கி விட்டவர். (எனவே அவர் வன வாழ்வின் வனப்புகளைக் காணும்) மோஹம் அடையமாட்டார்.

**கதா3சித் ப்ராஸாதே3 க்வசி3தபி ச ஸௌதே4ஷு த4நிநாம்**
**கதா3 காலே சைலே க்வசித3பி ச கூலேஷு ஸரிதாம் ।**
**குடீரே தா3ந்தாநாம் முநிஜந - வராணாமபி வஸன்**
**முநிர் ந வயாமோஹம் ப4ஜதி குருதீ3க்ஷா - க்ஷததமா: ॥** 3

ஒரு ஸமயத்தில் அரண்மனையிலும், வேறு சில ஸமயங்களில் பணக்காரர்களுடைய மாடி வீடுகளிலும், பிரிதொரு ஸமயத்தில் மலையிலும், மற்றும் சில ஸமயங்களில் நதிகளுடைய கரைகளிலும், (இன்னும் சில ஸமயம்) இந்திரியங்களை அடக்கிய முனிஜன சிரேஷ்டர்களுடைய குடிசையிலும் வசித்துக்கொண்டிருக்கும் முனி தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆதலால் வாஸஸ்தான ஸௌக்யத்தில்) மோஹம் அடைகிறதில்லை.

**க்வசித் பா3லை: ஸார்த4ம் கரதலக3 தாலை: ஸஹஸிதை:**
**க்வசித் - தாருண்யாலங்க்ருத நர வதூ4பி: ஸஹ ரமன் ।**
**க்வசித்3 - வ்ருத்தை4ச்சிந்தாகுலித - ஹ்ருத3யைச்சாபி விலபன்**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷததமா: ॥** 4

சில ஸமயங்களில் உள்ளங்கைகளினால் தாளம் போட்டுக்கொண்டு சிறுவர்களுடன் சிரித்துப் பேசிக்கொண்டும், சில ஸமயங்களில் யௌவனப் பருவத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் ஸ்திரீ புருஷர்களோடு ரமித்துக்கொண்டும் சில ஸமயங்களில் கவலையினால் கலங்கின ஹிருதயத்தோடு கூடிய கிழவர்களோடு கூடப் புலம்பிக்கொண்டும் இருக்கிற முனியானவர் குரு தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆனதினால் இவர்களிடம் பற்றுக் கொண்டு) மோஹம் அடைவ தில்லை.

**கதா3சித் வித்3வத்3பிர் விவிதி3ஷுபி - ரத்யந்த நிரதை:**
**கதா3சித் காவ்யாலங்க்ருதி ரஸ ரஸாலை: கவிவரை: ।**
**கதா3சித் ஸத்தர்கை - ரநுமிதி - பரைஸ் தார்கிக வரைர்**
**முநிர் நவ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷததமா: ॥** 5

சில ஸமயத்தில் இடைவிடா ஈடுபாட்டுடன் கூட ஞான நாட்டம் வைத்த வித்வான்களோடும், சில சமயத்தில், காவியங்களிலுள்ள அலங்காரங்களின் ரஸத்தை நன்கு ரஸிக்கும் கவிசிரேஷ்டர்களோடும், சில சமயத்தில் நன்கு தர்க்கம் செய்கிறவர்களும், அனுமானப் பிரமாணத்திலேயே ஈடுபட்டவர்களுமான தார்க்கீக சிரேஷ்டர்களோடும் (கலந்து பழகுவதாகக் காணப்படும்) முனியானவா குருவின் தீக்ஷையினால் அக்ஞானம் அழிவுபட்டவர் (ஆதலின்) முமுக்ஷுக்களிடம் பாசம், கலையில் பாசம், தர்க்கத்தில் பாசம் என்றிப்படி) மோஹமுறுவதில்லை.

**கதா த்4யானாப்3யாஸை: க்வசி3தபி ஸபர்யாம் விகஸிதை:**
**ஸுக3ந்தை4: ஸத்புஷ்பை: க்வசிதபி த3ளைரேவ விமலை: |**
**ப்ரகுர்வன் தே3வஸ்ய ப்ரமுதி4த - மநா: ஸந்நதிபரோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷததமா: ॥ 6**

சில ஸமயம் தியானாப்யாஸங்களோடும், சில ஸமயத்தில் நன்கு மலர்ந்த வாஸனையாயுள்ள சிறந்த புஷ்பங்களினாலும், சில ஸமயங்களில் சுத்தமான இதழ்களாலே மாத்திரமும், மிகுந்த வினயத் துடன்கூடியவராக பகவானுடைய பூஜையை ஆனந்தம் பொங்கும் மனத்தினராக ஈடுபட்டுச் செய்துகொண்டிருக்கும் முனி, குரு தீக்ஷையினால் அக்ஞானம் போன வராதலின் (தியானம், பூஜை இவையே லக்ஷ்யம் என்று) மோஹமுறுவதில்லை.

**சிவாயா: சம்போ4ர் வா க்வசித3பி ச விஷ்ணோரபி கதா3**
**கணாத்யக்ஷஸ்யாபி ப்ரகடித - வரஸ்யாபி ச கதா3 |**
**பட3ன் வை நாமாளிம் நயந - ரசிதாநந்த3 - ஸலிலோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷததமா: ॥ 7**

சில சமயங்களில் அம்பிகையின் அல்லது பரமசிவனின் (நாமாவளியை) சில சமயத்தில் விஷ்ணுவின் அல்லது கணபதியின் நாமாவளியையும், சில சமயம் வரம் கொடுக்கும் (வேறு ஏதோ ஒரு) மூர்த்தியின் நாமாவளியை கண்களில் ஆனந்தக்கண்ணீருடன் படித்துக்கொண்டிருக்கும் முனியானவர் குரு தீக்ஷை யினால் அக்ஞானம் அகன்றவர் (ஆதலால் பூஜிக்கப்பெறும் தேவதையும் பூஜிக்கும் தாமும் வேறு என்ற) மோஹத்தை அடைவதில்லை.

**கதா3 க3ங்காம்போ4பி4: க்வசி3தபி ச கூபோத்2த ஸலிலை:**
**க்வசித் காஸாரோத்தை2: க்வசி3த3பி ஸது3ஷ்ணைச்ச சிசிரை: |**
**ப4ஜன் ஸ்நாநம் பூ4த்யா க்வசி2தபி ச கர்பூர நிப4யா**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3ஷா - க்ஷததமா: ॥ 8**

ஒருசமயம் கங்கா ஜலத்தினால், சில சமயம் கிணற்றில் ஊறும் ஜலத்தினால் பின்னும் ஒரு சமயம் குளத்திலுள்ள ஜலத்தினால், வேறு சில சமயம் நல்ல சூடான வெந்நீரினால், மற்றும் சில சமயம் குளிர்ந்த ஜலத்தினால், சில சமயத்தில் கர்பூரம் பிரகாசிக்கும் விபூதியினால் (என்றிப்படிப் பலவிதத்தில்) ஸ்நாநம் செய்கிற முனியானவர் குரு தீக்ஷையினால் அக்ஞானம் விலகின வராதலால் (நித்ய சுத்த ஆத்மாவுக்கு ஸ்நானம் வேண்டும் என்ற) மோஹத்தை அடைகிறதில்லை.

**கதா3சித் ஜாக3ர்த்யாம் விஷய கரணை: ஸம்வ்யவஹரன்**
**கதா3சித் ஸ்வப்நஸ்தா2னபி ச விஷயானேவ ச ப4ஜன் |**
**கதா3சித் ஸௌஷுப்தம் ஸுக2மநுபவன்னேவ ஸததம்**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா க்ஷத-தமா: ॥ 9**

ஒரு சமயம் விழித்துக் கொண்டிருக்கும் போது விஷயங்களோடும், இந்திரியங்களோடும் நன்கு வியவஹாரம் செய்து கொண்டும், ஒரு சமயம் ஸ்வப்னதசைக்கான விஷயங்களையே துய்த்துக்கொண்டும், ஒரு சமயம் நல்ல தூக்கத்திலுள்ள ஸுகத்தை இடையின்றி அனுபவித்துக் கொண்டும் இருக்கிற முனி (இவ்வாறு காணப்பட்டாலும்) குரு தீக்ஷையினால் அக்ஞானம் போன வராதலால் (இம்மூன்று நிலைகளுக்கும் மேம்பட்ட துரீயத்தில் உறைந்தவராதலால், இந் நிலைகளை உண்மை என எண்ணாமல்) மோஹமுறுவதில்லை.

**கதா$^3$(அ)ப்யாசா வாஸா: க்வசி$^3$தபி ச தி$^3$வ்யாம்ப3ர - த$^4$ர:**
**க்வசித் பஞ்சாஸ்யோத்தா$^2$ம் த்வசமபி ததா$^4$ந: கடி தடே |**
**மநஸ்வீ நிஸ்ஸங்க$^3$: ஸுஜந ஹ்ருத$^3$யாநந்த$^3$ ஜநகோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப$^4$ஜதி கு$^3$ருதீ$^3$க்ஷா-க்ஷத-தமா: ||** 10

ஒரு சமயம் திகம்பரராகவும், ஒரு சமயம் சிறந்த வஸ்திரத்தை உடுத்திக் கொண்டவராகவும், ஒரு சமயம் சிம்ஹத்திலிருந்து உண்டான தோலை (புலித் தோலை) இடுப்புப் பிரதேசத்தில் கட்டிக்கொண்டவராகவும் உள்ள நல்ல மனத்தவரும் பற்றற்றவரும், ஸாது ஜனங்களுடைய ஹிருதயத்திற்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறவருமான முனி, குரு தீக்ஷையால் அக்ஞானம் விலகினவ ரானதால் (ஆடை ஆபரணங்களில்) மோஹம் அடைகிறதில்லை.

**கதா$^3$சித் ஸத்வஸ்த$^2$: க்வசி$^3$தபி ரஜோவ்ருத்தி ஸுக$^3$தஸ்**
**தமோ வ்ருத்தி: க்வாபி த்ரிதய - ரஹித: க்வாபி ச புந: |**
**கதா$^3$சித் ஸம்ஸாரீ சருதிபத$^2$ - விஹாரீ க்வசித$^3$ஹோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப$^4$ஜதி கு$^3$ருதீ$^3$க்ஷா - க்ஷத - தமா: ||** 11

ஒரு சமயம் ஸத்வகுணத்தில் இருப்பவராகவும், ஒரு சமயம் ரஜோ குண நடத்தையில் ஈடுபட்டவராகவும், ஒரு சமயம் தமோகுண நடத்தையுள்ளவ ராகவும், ஒரு சமயம் முக்குணங்களற்றவராயும், ஒரு சமயம் (ஸுகதுக்கங்களை அனுபவிக்கும்) ஸம்ஸாரியாகவும், ஒரு சமயம் வேதமார்க்கத்தில் சஞ்சரிக்கிறவ ராகவும் முனிவர் (தோன்றுவது) ஆச்சரியம்! (இப்படியெல்லாம் தோன்றினாலும் அவர் குரு தீக்ஷையினால் அக்ஞானம் நீங்கின வராதலால் (இவை எவற்றிலும்) மன மயக்கமடைவதில்லை.

**கதா$^3$சிந் மௌநஸ்த$^2$: க்வசித$^3$பி ச வாக்$^3$வாத$^3$ - நிரத:**
**கதா$^3$சித் ஸாநந்த$^3$ம் ஹஸித - ரப$^4$ஸஸ் - த்யக்த - வசந: |**
**கதா$^3$சித் லோகாநாம் வ்யவஹ்ருதி ஸமாலோகந பரோ**
**முநிர் ந வ்யாமோஹம் ப$^4$ஜதி கு$^3$ருதீ$^3$க்ஷா - க்ஷத - தமா: ||** 12

ஒருவேளை, மௌன நிலையில் இருந்துகொண்டும், மற்றொருவேளையில் வாக்குவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டும், ஒரு வேளை ஆனந்தமாக அடங்காமல் சிரித்துக்கொண்டு (அதனால்) பேசாமலிருந்துகொண்டும் (பேசமுடியாதவராகியும்,

உலகத்தார்களுடைய வியவஹாரங்களைப் பார்ப்பதிலேயே ஈடுபட்டுமிருக்கிற முனி, குரு தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (இந்த உணர்ச்சிகள் ஸத்யமென எண்ணும்) மயக்கை அடைகிறதில்லை.

**கதா3சித் சக்தீநாம் விகச முக3பத்3மேஷு கமலம்**
**க்ஷிபம்ஸ் - தாஸாம் க்வாபி ஸ்வயமபி ச க்3ருஹ்ணன் ஸ்வமுக2த: |**
**தத3த்3வைதம் ரூபம் நிஜபரவிஹீநம் ப்ரகடயன்**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷத - தமா: ॥** 13

ஒரு சமயத்தில் ஸ்திரீகளுடைய மலர்ந்த பத்மம் போலுள்ள முகங்களின் மேல் தாமரையை விட்டெறிந்து கொண்டும், ஒரு சமயத்தில் தானும் அந்த ஸ்திரீகளால் (போடப்படும் தாமரையை) தன் முகத்தில் வாங்கிக்கொண்டும் தான் பிறர் என்பவை கிடையாதாய், இரண்டற்றதாய் உள்ள அந்த (ப்ரஹ்ம) ஸ்வரூபத்தை நன்கு காட்டிக்கொண்டிருக்கிற முனி ஞானியானவர் குருதீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராதலின் (ஸ்த்ரீ - புருஷ பேதமெனும்) மோஹத்தை அடைகிறதில்லை.

**க்வசித் சைவை: ஸார்த4ம் க்வசித3பி சாக்தை: ஸஹ வஸன்**
**கதா3 விஷ்ணோர் ப4க்தை: க்வசி3தபி ச ஸௌரை: ஸஹ வஸன் |**
**கதா3 கா3ணாத்4யக்ஷைர் க3த - ஸகல - பே4தோ3(அ)த்3வயதயா**
**முனிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷத - தமா: ||** 14

சில சமயங்களில் சிவபக்தர்களோடும், சில சமயங்களில் சக்தி உபாசகர் களோடும் வசித்துக்கொண்டும், சில சமயங்களில் விஷ்ணுவினுடைய பக்தர் களோடும், சில சமயங்களில் ஸூர்ய உபாசகர்களோடு வசித்துக் கொண்டும், சில சமயங்களில் கணபதி உபாசகர்களோடு வசித்துக்கொண்டும், இரண்டற்ற தன்மையை அடைந்தவராய், எல்லாவித வேற்றுமைகளுமற்றவராய் இருக்கும் முனியானவர் குரு தீக்ஷையினால் அக்ஞானம் விலகின வராதலால் (தெய்வபேதம் எனும்) மோஹத்தை அடைகிறதில்லை.

**நிராகாரம் க்வாபி க்வசித3பி ச ஸாகார - மமலம்**
**நிஜம் சைவம் ரூபம் விவித4குண பே4தே3ன ப3ஹுதா4 |**
**கதா3(ஆ)ச்சர்யம் பச்யன் கிமித3மிதி ஹ்ருஷ்யன்னபி கதா3**
**முநிர் ந வ்யாமோஹம் ப4ஜதி கு3ருதீ3க்ஷா - க்ஷத - தமா: ||** 15

சில சமயம் உருவமற்ற (பிரஹ்ம ஸ்வரூபத்)தையும், சில சமயம் நிர்மலமான தன்னுடைய மங்களமான ரூபத்தைபேய், பலவித குணங்களின் வேற்றுமையால் பலவித ரூபமுள்ளதாகவும், சிலசமயம் "இது என்ன?" என்று ஆச்சர்யமாகப் பார்த்துக்கொண்டும், (தனக்குத் தேஹமும் உண்டா என்று ஆச்சர்யப்பட்டுக் கொண்டும்) பார்த்துக் கொண்டும், சில சமயம (இதில்) சந்தோஷப்பட்டுக் கொண்டும் இருக்கிற முனியானவர் குரு தீக்ஷையினால்

அக்ஞானம் நிவர்த்தியானவராதலின் (ரூபா ரூப பேதங்களில்) மோஹ முறுவதில்லை.

**கதா[3](அ)த்[3]வைதம் பச்யன்னகி[3]லமபி ஸத்யம் சிவமயம்**
**மஹாவாக்யார்த்தா[2] - நா - மவக[2]தி - ஸமப்[4]யாஸ - வசத: |**
**க[3]த - த்[3]வைதாபாஸ: சிவ சிவ சிவேத்யேவ விலபன்**
**முநிர் ந வ்யாமோஹம் ப[4]ஜதி கு[3]ருதீ[3]க்ஷா - க்ஷத - தமா: ||** 16

சிலசமயம் (ஜீவ - ப்ரஹ்ம ஐக்யம் கூறுவதான உபநிஷத்திலுள்ள மஹா வாக்யங்களுடைய தாத்பர்யார்த்தங்களை அறிந்து நன்கு அப்யாஸம் செய்திருப் பதனால், எல்லாவற்றையும் இரண்டற்ற சத்யமான சிவமயமாக (அதாவது சாந்த அத்வைத - துரியமாக வே) பார்த்துக் கொண்டு, த்வைதத் தோற்றம் விலகினவராக

"சிவ, சிவ, சிவ," என்று மாத்திரம் புலம்பிக்கொண்டிருக்கும் முனியானவர் குரு தீக்ஷையினால் அக்ஞானம் விலகிவிட்டவராதலால் ('சிவ' என்னும் சொல், அதைச் சொல்லும் தாம், சொல்லப்படும் சிவபரமாத்மா இவற்றிடை பேதம் என்ற) மோஹத்தை அடைவதில்லை.

**இமாம் முக்தாவஸ்த்தாம் பரமசிவ ஸம்ஸ்த்தாம் குருக்ருபா**
**ஸுதாபாங்க வ்யாப்யாம் ஸ்ஹஜ ஸுக வாப்யாமநுதினம் |**
**முஹுர் மஜ்ஜன் மஜ்ஜன் பஜதி ஸுக்ருதைச்சேத் நரவர:**
**ஸதா த்யாகீ யோகீ கவிரிதி வதந்தீஹ கவய: ||** 17

ஒருவர் நற்செயல்களால் (நற்செயல்களின் புண்ய பலனால்) குருவருளாகிய அமிருத கடாக்ஷத்தினால், பரமசிவ (மாகிய பரப்பிரஹ்ம)த்தில் நிலைத்து அநுதின மும மீள மீள தனது ஸ்வபாவமேயான ஆனந்தவாரியில் முழுகி முழுகி (மேலே ச்லோகங்களில் சொல்லப்பட்ட) இந்த ஜீவன் முக்தருடைய போக்கை (தாமறியாமல்)ச் செய்து காட்டு வாரேயானால் அவரே எப்பொழுதும் எல்லாவற்றையும் விட்டு விட்ட தியாகி (ஸன்யாஸி) அவரே, யோகி, அவரே எல்லாமறிந்தவர் என்று அறிவாளிகள் சொல்கிறார்கள்.

